ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# கொரோனாவும்!
# கொடிய மரணமும்!



**சுவாமி பிரபஞ்சநாதன்**

# கொரோனாவும்! கொடிய மரணமும்!

மனிதனின் உயிராற்றல் என்பது தூய்மையான எண்ணங்களும், அமைதியும், ஆனந்தமும் அனுபவமாகும் ஒரு நிகழ்வு எனப்படும். அதாவது, தன்னுயிர் போன்றே அனைத்து உயிர்களும் ஒன்றெனக் கருதும் ஒரு உயர் நலப்பண்பு எனலாம்.

அந்த வகையிலே, மனிதன் இந்தப் பூவுலகில் மட்டும் உறுப்பினர் அல்ல. இந்த மொத்த பிரபஞ்சத்திலும் அவன் ஒரு உறுப்பினர் என்பதை அறியும் பொழுது, அவன் அடுத்த தலைமுறைக்கு அமைதியையும், ஆனந்தத்தையும் கொண்டு சேர்ப்பவனாக மாறி விடுகின்றான்.

ஆனால், இன்றைய நவீன கல்விமுறையின் கட்டுப்பாட்டில் கட்டுண்ட தற்போதைய மனிதன், தன் மனம் போன போக்கில் வாழ்ந்து, அதன் விளைவுகளாக நாகரிகத்தில், பண்பில், குணத்தில் அதன் உச்சியை அடைந்து விட்டதாக பெருமை கொள்ளும் காலகட்டத்தில்… மனிதன், மனிதம் இழந்து, மானம் இழந்து, வரலாற்றையும் தொலைத்து நிற்கிறான் என்பதை இன்றைய நிகழ்வுகள் நமக்குச் சுட்டிக் காட்டுகின்றன.

பல்கிப்பெருகிய மயில்களால் அவதியுறும் விவசாயிகள்! வழக்கத்திற்கு மாறாக மயில்களின் எண்ணிக்கை இப்போது அதிகரித்திருக்கிறது. இது இயற்கை சமநிலையின்மையை நமக்கு உணர்த்துவதாக இருக்கிறது.

இந்த நிலைக்குக்காரணம் நாம் அழித்த '**உயிர்வேலிகள்**' என்று அழைக்கப்படுகின்ற இட்டேரிகள் தான் காரணம் என்கின்றனர். இதே நிலை தொடர்ந்து நீடித்தால், பெரும் இயற்கை பிரச்சனைகள் ஏற்படும் என்றும் எச்சரிக்கின்றனர்.

"**ஓர் உயிரினத்தின் அழிவு எவ்வளவு ஆபத்தோ, அதே அளவு ஆபத்து ஓர் உயிரினம் அதிக எண்ணிக்கையில் பெருகுவதிலும் இருக்கிறது**".

அது மனிதனுக்கு மட்டும் விதிவிலக்கல்ல!

சமீபகாலமாக மயில்களின் எண்ணிக்கை மிகவும் அதிகரித்திருக்கிறது, அது விவசாயத்திற்கு பெரும் பாதிப்பை உண்டாக்குகின்றது என்று எச்சரிக்கை விடுகின்ற இவர்கள், தங்கள் தவறுகளை தாங்களே உணர்வதில்லை.

உண்மையில் ஒரு உயிரினம் பல்கிப் பெருகு வதினால் மட்டும் பாதிப்புகள் வருவதில்லை. பல்வேறு

உயிரினங்களை அழிக்கின்ற பொழுதும் பாதிப்புகள் வருகின்றன என்பதை இவர்கள் மறந்துவிட்டு இவ்வாறு பேசுகின்றார்கள் எனலாம்.

இவர்களது சுயநலத்தின் காரணமாக, இவர்களது நாக்குச் சுகத்திற்காகவும், சுவைக்காகவும் என உற்பத்தி செய்யப்படுகின்ற ஏராளமான பிராய்லர் கோழிகளை எடுத்துக் கொண்டால், அதில் உயிரினங்கள் பல்கிப் பெருகுவதில்லை என்று கூற முடியுமா?

இவர்களாகவே கோழிகளை உற்பத்தி செய்து, பல்கிப் பெருக்குகின்றார்கள். இதில் இவர்களுக்கு இயற்கைச் சம நிலை பாதிக்கப்படுவதை அறிய முடியவில்லையா?

இவர்கள் உணவாக உண்பதற்காகத் தயாரிக்கப் படுகின்ற பிராய்லர் கோழிகளின் எண்ணிக்கையைக் கணக்கில் எடுத்துக் கொண்டு பார்க்கின்ற பொழுது, மயில்களின் எண்ணிக்கை அவ்வளவு ஒன்றும் அதிகம் ஆகி விடவில்லை என்றே கூறலாம்.

மனிதர்களின் கண்களுக்கே அகப்படாத அந்த மயில் இனம் இன்று மனிதர்களின் மத்தியில் காணப் படுவதற்கான காரணத்தையும் இவர்கள் அறிய மறுக்கின்றனர்.

மயில்கள் பல்கிப்பெருகி வருவதற்கும், அவைகள் உணவின்றி ஊர்களுக்குள் வருவதற்கும் இதே விவசாயிகள்தான் முக்கியக் காரணம் எனலாம். எப்படியெனில், இவர்கள் விவசாயம் செய்கின்ற பயிர்களான தென்னை, வாழை, மா, பலா போன்ற பல்வேறு மரங்களின் மத்தியில் விளைகின்ற செடி, கொடிகளை களைச் செடிகள் என்று பறவைகளின் உணவான அவைகளை அழிக்கும் நோக்கத்தில் களைக் கொல்லி மருந்துகளை அதிகம் கையாளுகின்றனர்.



இதனால், இவர்கள் களைக்கொல்லி அடித்த பகுதிகளில் உள்ள செடி, கொடிகள் செத்து மடிவது மட்டுமல்லாமல், அந்த தாவரங்களை உணவாக உண்டு உயிர் வாழும் புழு, பூச்சிகள் முதற்கொண்டு பெரும் பாலான கண்ணிற்குத் தெரியாத உயிரினங்கள் இந்த களைக்கொல்லி அடிப்பதினால் இறந்து விடுகின்றன.

இதனால், மயில்கள் போன்ற பறவைகள் உண்பதிற்கு உணவு இன்றி ஊருக்குள் வருகின்றன.

மனிதன் தன் சுய நலத்தினால், மற்ற உயிர்களை வாழ விடாமல் தான் மட்டும் வாழ வேண்டும் என்று நினைத்து இவன் செய்யும் அக்கிரமங்களை இயற்கைப் பொருத்துக் கொள்ள முடியாமல்தான் தன்னைத்தானே சமநிலைப் படுத்திக் கொள்ள முயற்சிக்கின்றது.

இந்த உண்மையை அறியாத மனிதன் மற்ற உயிரினங்கள் பல்கிப் பெருகுவதை கட்டுப்படுத்த வேண்டிய கட்டாயம் இல்லை. அதை இயற்கையே தன்வசம் வைத்துள்ளது.

ஆம், கடந்த ஆண்டு ஆஸ்திரேலியாவில் ஏற்பட்ட மிகப்பெரும் தீ விபத்தில் எண்ணிக்கையில் அடங்காத உயிரினங்கள் கொல்லப்பட்டன.

அந்த உயிர்களின் அழிவுகளினால், இயற்கை தன் சமநிலையை இழந்துள்ள காரணத்தினால், அது தன்னைத்தானே சரி செய்துக் கொள்வதற்காக பல்வேறு நாடுகளின் மனித உயிர்களை எடுத்து ஏகதேசமாக தன்னை சமப்படுத்த முயல்கின்றது. இதனைத்தான் இன்றைய மனித மரணங்கள் நமக்குச் சுட்டிக் காட்டுகின்றது.

மனிதர்கள் அதிகமாகப் பல்கிப் பெருகினாலும், இயற்கை அதை சமன் செய்யும் என்ற எளிய உண்மையை எளிதாக மறந்துவிட்டு, மற்ற உயிர்கள் பல்கிப் பெருகுவதுதான் இயற்கையின் சம நிலை பாதிக்கப்படுகின்றது என்பதை ஏற்க முடியாது. அந்த வகையிலே இந்த மயில்களின் பெருக்கம் பற்றிய விவசாயிகளின் பேச்சு பயனற்றது எனலாம்.

கடந்த 11 ஜனவரி 2020 தேதியிட்ட ஆஸ்திரேலிய அரசு ஊடகங்களில், இதுவரை ஏற்பட்ட காட்டுத்தீயில் ஏறத்தாழ 11 மில்லியன் ஹெக்டேர் காடுகள், நூறு கோடி விலங்குகள், 23 மனிதர்கள், 2000 வீடுகள் அழிந்துள்ளன எனத் தெரிவித்துள்ளது.




11 மில்லியன் ஹெக்டேர் என்பது பல நாடுகளின் ஒட்டு மொத்தப்பரப்பளவை விடப் பெரியது.

அங்கு எரிந்த காட்டுத்தீ அனைத்தும் இயற்கையாய் நிகழ்ந்ததல்ல என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். மனிதனால் ஏற்றி வைக்கப்பட்டது ஆகும்.

காட்டில் மற்றும் விவசாய விளை நிலங்களில் மக்களின் பொறுப்பற்ற செயல்களான வேண்டுமென்றே தீ வைத்தல், களைக்கொல்லி அடித்தல், இரசாயண மருந்துகளை தெளித்தல், இராசயண உரங்கள் வைத்தல் போன்ற அனேக அக்கிரமங்களை பொறுக்க முடியாத இயற்கைத் தன்னைத்தானே சமச்சீர் செய்துக் கொள்கின்றது என்பதைக் கூட, அறிய முடியாத அளவிற்கு மக்கள் முட்டாள்களாக இருப்பதுதான் இன்றைய நவீன கல்விமுறைக் கற்றுக் கொடுத்துள்ள பாடத்திட்டங்கள் எனலாம்.

**கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின். -** திருக்குறள்.

ஆனால், நாம் திருக்குறளை படிக்க மாட்டோம். அப்படியே படித்தாலும் புரிந்துக்கொள்ள மாட்டோம். அப்படியே புரிந்துக்கொண்டாலும், தவறாகவே புரிந்துக் கொள்வோம். இதுதான் இன்றைய கல்வி முறை கற்றுக் கொடுக்கின்ற நிலை.

அறிவு வடிவாக விளங்கும் இறைவனுடைய திருவடிகளைத் தொழாமல் இருப்பாரானால், அவர் கற்ற

கல்வியினால் பயன் என்ன? என்பதாக விளக்கம் அளிக்கின்றனர்.

ஆனால், உண்மை அப்படி அல்ல.

வாலறிவன் என்பதை நமது தமிழ் சித்தர் வள்ளுவர் கூற வந்தது வேறு.

அதாவது, வாலையை அறிந்தவன் எவனோ அவனே உண்மையில் அனைத்தையும் கற்றறிந்த ஞானி எனப்படுகின்றான். அத்தகைய ஒரு ஞானியின் அறிவை அடைய முடியாத கல்வியை கற்பதினால் பயன் என்ன? என்று கேட்கின்றார்.

வாலை என்பதை வைத்திய சாஸ்திரத்தில் மெய்ப்பொருளைப் பற்றி அறியக்கூடிய "**சாகாக்கலை**" என்ற கல்விமுறை ஆகும். இந்தக் கல்வி முறையைக் கற்றவனே உண்மையில் கல்வி கற்றவவன் என்கின்றார் நமது வள்ளுவப்பெருந்தகை போன்ற சித்தர் பெரு மக்கள்.

வாலையை அறிந்தவனையே அனைத்தையும் அறிந்தவன் என்ற அடிப்படையில் ஞானி என்கின்றார். "**எதை அறிந்துக் கொண்டால், அனைத்தையும் அறிந்ததாகுமோ, அதை அறிவதே அறிவு**" என்று சாஸ்திரமும் இதைத்தான் சுட்டிக் காட்டுகின்றது.

இதனையே **அறம், பொருள், இன்பம், வீடு** என்று வாழ்வியல் நெறி முறைகளாகவும் நமது சனாதனதர்மம் வலியுறுத்துகின்றது.

ஆனால், நாம் இதனையா இன்று கற்றுக் கொடுக்கின்றோம்?

இன்றைய கல்வியின் ஒரே நோக்கம் பணம் சம்பாதிப்பதைப் பற்றியே கற்றுக் கொடுக்கப்படுகின்றது. அந்த பொருளீட்டும் ஆசையினால் அறம் அழிக்கப் படுகின்றது. அதன் வாயிலாக இன்பம் உண்டாவதற்குப் பதிலாக துன்பம் உண்டாவதை இன்றைய மனிதன் உணர்வதில்லை.

அதுவே, மற்றவர்களை அழித்து தான் மட்டும் நன்றாக வாழ வேண்டும் என்பதாக, எல்லோரையும் ஏமாற்றக் கூடிய எண்ணங்களால் இவர்கள் ஏற்றி வைக்கப்படுகின்றார்கள். அதனால்தான் கல்வி கற்கும் பொழுதே கட்டாயப் பணம் பறிக்கும் கல்வியாக இன்றைய கல்வி முறை காணப்படுகின்றது. அந்தக் கல்வித் திட்டத்தில் கற்று முடித்தவனும் அதே பணம் பறிக்கும் வேலையைத்தான் வெகுவாகச் செய்கின்றான்.

பொதுவாக அரசு நிர்வாகத்திலும், மக்களின் அத்தியாவசியத் தேவைப் பண்டங்களிலும் அதிகமான ஊழல்கள் காணப்படுகின்றது. இதற்குக் காரணம் பணம் என்ற பொருள் ஆசை மட்டுமே ஆகும். அதாவது,

நமது தர்மத்தில் இருந்து **பொருள்** என்ற பகுதியை மட்டும் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

அதுவே, பொருள் சம்பாதிப்பதைத்தவிர, மற்ற தர்மங்களான **அறம், இன்பம், வீடுபேறு** என்பதைப் பற்றி யாருமே பேசுவதில்லை.

இதனால், இனி வருகின்ற இளைய சமுதாயமும் இன்பத்தை அடையப் போவதில்லை. ஒருவனுக்கு ஒருவன் அழிவுப்பாதையில் மட்டுமே முன்னேற விரும்புகின்றான். அதன் ஆதிக்கமாகத்தான் நாம் காணும் இன்றைய நடைமுறை வாழ்க்கையின் பல்வேறு நிகழ்வுகளும் இருக்கின்றன.

மரம் வளர்த்த அன்றைய அரசு எப்படி இருந்தது? மரத்தை வெட்டி வீழ்த்துகின்ற இன்றைய அரசு எப்படி இருக்கின்றது?

அந்தவகையிலே, மனிதர்களுக்குத் தேவையான பிரணவாயுவை உற்பத்தி செய்கின்ற பெரும்பாலான மரங்களை அழித்து முடித்த இவர்கள் பெட்ரோல், டீசல், நிலக்கரி மின்சாரப் பயன்பாடுகள் போன்ற வைகளின் மூலம் **அதிக கார்பன்** வெளியிடப்படுகிறது என்பதைக்கூட அறியாத முடியாத அளவிற்கு அறிவியல் அறிந்துள்ளனர் எனலாம்.

இந்த கார்பன் பூமியில் அளவுக்கு அதிகமாக வெப்பத்தை அதிகரிக்கிறது என்பதைப்பற்றி 30 ஆண்டுகளுக்கும் மேலாக ஆய்வாளர்கள் எடுத்துக் கூறும் எச்சரிக்கையை, இன்றைய சுயநல மனிதனோ காதில் வாங்கிக் கொள்ளவதே கிடையாது.

அதாவது, மனிதன் முதல் மற்ற சீவராசிகள் சுவாசிக்கத் தேவையானப் பிராண வாயுவைத் தரக் கூடிய மரங்களை வெட்டி விழ்த்தி விட்ட இந்த வீணர்கள், இன்றைய மனித மரணத்திற்குக் காரணம் சுவாசிக்க இயலாத அவனது நுரையீரல்தான் என்றும், மூச்சுவிட முடியாமல் முடிந்து போனான் என்றும், அந்த மரணம் ஏற்படுவதற்குக் கொரோனோதான் காரணம் என்றும் கதை அளக்கின்றார்கள்.

இதுமட்டுமா! இத்துடன் இன்றைய அரசும், மருத்துவர்களும் அறிவித்துள்ள ஆட்கொல்லி கொரோனா என்ற நுண்கிருமி நம் காதுகள் வழியாக உள்ளே நுழையுமா? நுழையாதா? அதனால், மனிதனுக்கு மரணம் சம்பவிக்காதா? போன்ற சந்தேகங்களுக்கு சரியான பதிலைத் தர மறுக்கின்றனர்.

அத்துடன், என்றும் நம்மை விட்டு நீங்க முடியாத இன்றைய மெய்ப்பொருளாக நம்மிடையே உள்ள பணத்தைப் பலவாறாகப் பலரிடமும் இருந்து வாங்கியும், கொடுத்தும் எண்ணுவதினால், இந்த கொரோனா நோய் தொற்று பரவாதா? என்பதற்கும்

எந்த விதமான சரியான பதிலும் கொடுக்க மாட்டேன் என்கின்றார்கள். அதே சமயம் இந்தப் பணத்தைக் கையாளும் எல்லா மனிதர்களும் நோய் தொற்றில் சிக்குவதும் இல்லை. **ஏன்?**

அத்துடன், அரசு நிர்வாகமும் அதனைக் கண்டறியக் கூடிய சாதகமான சூழலை உண்டாக்காமல், சற்றும் சலைக்காமல் மக்களிடம் பணம் பறிக்கும், மருத்துவத்தையும், மதுவையும் ஊக்குவிக்கிறது

**அரசன் எவ்வழியோ! மக்களும் அவ்வழியே!** என்பது நம் முன்னோர்களின் முதுமொழி.

யோசித்துப் பாருங்கள்!

இன்றைய ஆட்சியாளர்களுக்கும், அரசு அதிகாரிகளுக்கும், அரசு மருத்துவர்களுக்கும் என எல்லோருக்கும் இதன் உண்மை நன்றாகத் தெரியும். இருந்தும் இவர்கள் இந்த பாமர மக்களிடம் பணம் பறிக்கின்றார்கள் என்றால், மருத்துவம் என்பதும், கல்வி என்பதும் சேவையா அல்லது செல்வந்தராக்கும் சேர் மார்க்கெட்டா?

யோசித்துப் பாருங்கள்!

பொதுவாக, ஒரு சாதாரண நீர்த்தன்மைக் கொண்ட திரவத்தை (காதுகளில் ஊற்றும் சொட்டு

மருந்து) காதுகளில் ஊற்றும் பொழுது, அது காதுகளில் வழியாகச் சென்று தொண்டைக்குள் வரும் என்பது அறிந்தும் அனவாசியமாக மூக்கையும், வாயையும் அடைக்கும் ஆடைகளின் அமோக விற்பனை, இன்று சராசரி மனிதனின் ஜட்டி, பனியன் விற்பனை போன்று விலை உயந்து விட்டது.

இந்த அரசும், அரசு அதிகாரிகளும், மருத்துவர்களும் என இவர்கள் மக்களுக்கு அறிவுறுத்தும் ஆலோசனையோ, மூக்கையும், வாயையும் மட்டும் துணியால் மூடுங்கள் என்பதாக இருக்கின்றது.

மேலும், இவர்கள் கூறுவதோ கொரோனா என்பது சாதாரண கண்களால் காண முடியாத நுண்கிருமி என்பதாக கூறப்படுகின்றது. அப்படி இருக்கும் நுண் கிருமி மூக்கு மற்றும் வாய்வழியாக மட்டுமே உடலின் உள்ளே நுழைய முடியும் என்றும், காதுகள் வழியாக கண்டிப்பாக நுழைய முடியாது என்றும் கூறுவது எதன் அடிப்படையில் என்பது சாதாரண மக்களுக்கு புரியவே இல்லை.

என்ன நடக்கின்றது இந்த தேசத்தில் என்பதைக் கூட ஒரு எளியவனால் எளிதாக அறிய முடியவில்லை. எல்லோரும் ஜன நாயகம் என்றுக் கூறிக்கொண்டும், மக்களாட்சி என்றும் கூறிக் கொண்டும் இருக்கின்றோமே தவிர, ஆட்சியாளர்களின் ஆதிக்கத்தில் கட்டி வைக்கப்

பட்டுள்ளோம் என்பதைக் கூட அறியமுடியாத அளவிற்கு அறிவு குறைவாக இருக்கின்றோம்.

எல்லையில்லா இந்தப் பிரபஞ்சம் தன்னைத் தானே ஒழுங்குபடுத்திக் கொள்கின்ற ஒப்புயர்வற்றது. அதன் சம நிலைகள் எப்பொழுது எல்லாம் பாதிப்புக்கு உட்படுகின்றதோ, அப்பொழுது எல்லாம் அது இயற்கைச் சீற்றங்களாக மாறி மனிதர்களாகிய நமக்கு எச்சரிக்கை செய்கின்றது. ஆனால், இயற்கையின் இந்த எச்சரிக்கையை ஏற்று, எல்லோரும் மாறிக்கொள்ளத் தயாராக இல்லை.

ஆனால், எல்லையில்லா இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கத்தில் மனிதர்கள் எல்லோரும் இன்னல்களுக்கு உள்ளாவது என்பது, இவர்கள் இயற்கையின் உடலில் தாங்களும் ஒரு அங்கம் என்பதை அறியாமல் இருப்பதுதான் காரணம் ஆகும்.

**மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று**. - குறள்.

எவ்வாறு தனி மனித உடலில் (வியஸ்டி சரீரம்), **வாதம், பித்தம், கபம்** என்ற மூன்றும் அளவுக்கு மிகுந்தாலும், குறைந்தாலும் நோய் செய்யுமோ, அவ்வாறே இந்த மொத்த பிரபஞ்சத்தின் (சமஸ்டி சரீரம்) முக்குணங்களான **சத்துவம், ராஜஸம், தாமஸம்** என்பதில் எது ஒன்று மிகுந்தாலும், குறைந்தாலும்

அதற்கேற்ற விளைவுகளை மக்களிடம் வெளிப்படுத்தும் என்பதையும் நாம் ஏற்கத்தான் வேண்டும்.

அதன் அடிப்படையில், பிரபஞ்சத்தின் சம நிலை பாதிக்கப்படும் பொழுது, அது தன்னைத்தானே சீர் படுத்திக் கொள்ளும் ஆற்றலை வெளிப்படுத்தும். அதன் விளைவைத்தான் நாம் இன்று மனித மரணங்களாகப் பார்க்கின்றோமே தவிர, நாம் நினைத்துக் கொண்டிருப்பதுப் போன்று கொரோனா என்ற நுண் கிருமிகளால் அல்ல என்பதை அவசியம் அறிய வேண்டும்.

உண்மையிலேயே இவர்கள் கூறுவதுப் போன்று நுண்கிருமிகளான கொரோனா என்பது இருக்குமானால், எது எல்லோரையும் நிச்சயம் அழித்துவிட்டே ஓய்வு எடுக்கும். அது மூக்கையும், நாக்கையும் மூடியவனை மட்டும் கொல்லாமல் விட்டு, காதுகளை மட்டும் மூடாதவனை கொன்று குவிக்கும் என்பதுகூட நடை முறையில் சரியாக வரவில்லை என்பதைப் பார்க்கும் பொழுதும் இது ஏதோ ஏமாற்று வேலையைப் போன்றே தோன்றுகின்றது.

அப்படியானால், இந்த மனித மரணங்கள் எப்படி எல்லா பகுதிகளிலும் நடைப்பெறுகின்றது? ஏன் இத்தனை உயிர் பலிகள் உண்டாகின்றது என்று கேட்டீர்களேயானால், ஏற்றி வைக்கப்பட்ட தவறான எண்ணங்களே அவர்கள் மரணத்திற்கு மிக முக்கியக்

காரணமாகின்றது என்பதை எளிதாக அறிய முடிகின்றது.

மரண பயமே! மனிதனை எளிதாக மரணத்தை நோக்கி அழைத்துச் செல்கின்றது.

அதாவது, சாகக்கிடப்பவனையும் உனக்கு நோய் ஒன்றுமில்லை, உன்னால் உண்மையில் எழுந்துவிட முடியும் என்று, எளிதாக அவனது மரண பயத்தினை போக்கி, அவனது தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டிய மகத்தான மருத்துவமே, இன்று மனிதனை மரண பயம் காட்டி, அவனை மரணத்தின் வாயிலுக்கு அழைத்துச் செல்கின்றது என்பதை அறியும் பொழுது அதன் ஆதங்கத்தை வெளிப்படுத்த முடியாமல் இருக்க முடியவில்லை.

ஆம்! அன்று மனிதன் ஆஸ்திரேலியாவில் வைத்த நெருப்பு, இன்று அனைத்து நாடுகளை ஆட்டி வைக்கின்றது. அந்த தீயின் பாதிப்பினால்தான் எண்ணற்ற உயிரினங்களான, மரம், செடி, கொடிகள், பறவைகள், விலங்குகள், ஊர்வன, பூச்சி, புழுக்கள் என மில்லியன் கணக்கான உயிரினங்கள் எரிந்து சாம்பல் ஆயின. அந்த தீயை அணைக்க முடியாமல் ஆஸ்திரேலிய அரசு பல மாதங்கள் கடுமையாக போராட வேண்டியிருந்தது.

இந்த பிரபஞ்சத்தின் நியதிப்படி, எந்த ஒரு மூலையில் எது நடந்தாலும், அதன் மொத்த உடலிலும் ஒரு மாற்றம் நடைப்பெற்றே தீரும் என்பது நியதி.

அந்த வகையிலே அன்று நடந்த அத்தனை உயிரினங்களின் படுகொலைச் சம்பவம், படர்ந்த இந்த பூமிக்கு ஒரு மாற்றத்தை உண்டாக்குகின்றது.

மனித உடலிலும் ஒரு உறுப்பில் நோய் வந்தாலும், அது மொத்த உடலுக்கு வேதனையைத் தருவதுப் போன்றே, இந்த பிரபஞ்சத்தின் ஒரு பகுதியான பூமிப்பந்தில் எங்கு எது நடந்தாலும், அது இந்த மொத்த பூமியையே வேதனைப்படுத்தும் என்ற அறிவியல் உண்மையைக் கூட, அறிய முடியாத அளவிற்கு இன்று அறிவியல் நமக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. மனிதர்களின் இந்த மாற்றம் மகத்தான ஆறறிவு படைத்த மனித குலத்திற்கே இழுக்கு எனலாம்.

எனவே, இனி வரும் காலத்தில் மனித இனம் மகத்தான இனமாகப் போற்றப்படுவதும், மடிந்து மண்ணோடு, மண்ணாக மாற்றப்படுவதும் மனிதர்களின் கையில் மட்டுமே உள்ளது.

அதைத்தான் அன்றைய பெரியவர்கள் “**உன் வாழ்க்கை உன் கையில்**” என்று எளிமையாக எடுத்துக் கூறினார்கள்.

படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களைப் பொருத்தவரை, அதன் உயிர் என்று பார்கின்ற பொழுது, அது அனைத்திற்கும் பொதுவானது. இதில் மனிதனின் உயிர் மகத்தானது. தாவரத்தின் உயிர் தாழ்ந்தது என்று எப்படிக் கூற முடியும்?

யோசித்துப் பாருங்கள்!

இந்த பிரபஞ்சத்தின் ஒரு உறுப்பாகிய உன்னத பூமியில் படைக்கப்பட்ட அனைத்து உயிர்களும் ஒன்றை ஒன்று சார்ந்து வாழ்கின்ற உணவுச் சக்கரத்தில் சுழன்றுக் கொண்டுள்ளது.

அது எப்படி எனில், மண்ணில் விளைகின்ற செடி, கொடிகள், காய், கனிகளை மற்ற சீவராசிகளான பறவைகள், புழு, பூச்சிகள், ஆடு, மாடுகள் போன்றவைகள் உணவாக உட்கொள்கின்றன. அந்த ஆடு, மாடு, கோழிகள், பறவைகள் முதற்கொண்டு ஒன்றையும் விட்டு வைக்காமல், அனைத்தையும் மனிதன் உணவாக உட்கொண்டு, மரணத்தினால் மனிதன் மண்ணிலேயே புதைக்கப்பட்டு, அதே தாவரங்களுக்கும், புழு, பூச்சிகளுக்கும் உணவாக ஆகின்றான்.

மனிதனை நெருப்பில் எரித்து சாம்பலாக்கி, தண்ணீரில் கரைத்தாலும், அந்த நீரை தாவரங்கள்

உணவாக உறுஞ்சி உட்கொண்டு, மீண்டும் தங்களை உணவாகவே மற்ற சீவர்களுக்கு பசியாற உதவுகின்றன.

இது ஒரு உணவுச்சக்கரம் என்பதையும், இதில் ஒன்றை ஒன்று சார்ந்து வாழுகின்ற உணவுச் சக்கரமான உண்ணும் உணவில் கை வைக்கக் கூடாது என்ற கல்வியைக் கற்காத மனிதன், எத்தனைக் கற்றிருந்தாலும் அவன் கல்லாதவனே என்கின்றனர் நம் முன்னோர்கள்.

"**தனியொரு மனிதனுக்கு உணவில்லை எனில் இந்த ஜகத்தினை அழித்திடுவோம்**" என்றார் மகாகவி சுப்ரமணிய பாரதி. அவரே இன்று உயிரோடு இருந்திருந்தால், '**இரசாயன இடுபொருட்கள் மூலம் கிடைக்கும் உணவை அழித்திடுவோம்**' என்று பாடியிருக்கக்கூடும்.

**இந்த உலகின் ஆதாரம் உணவு.**

**உணவில்லையேல் உயிரில்லை.**

ஆனால், இயற்கை தருகின்ற அந்த இனிய உணவை மனிதர்கள் தங்கள் சுயநல ஆசைகளினால், தான் மட்டும் சம்பாதிக்க வேண்டும், மற்றவர்கள் எப்படி நாசமாகப் போனாலும், அதனால் எனக்கு ஒன்றும் பாதிப்பில்லை என்ற பண்புகளைப் படித்து வருகின்றார்கள். அதன் ஆதிக்கமாகத்தான் நாம் இன்று

நடைமுறையில் காண்கின்ற நஞ்சாகி, நம்மை மெல்லக் கொல்லும் விஷமாகிய இரசாயன உரங்களால் உண்டாக்கப்படுகின்ற உணவுகள் எனலாம்.

இந்த உலகம் தோன்றியதிலிருந்தே உணவுத் தயாரிப்பும் தொடங்கிவிட்டது. தாவரங்கள் தொடங்கி, ஊர்வன, நடப்பன, பறப்பன என அனைத்து விலங்குகளும் இயற்கையிலிருந்தே தங்களுக்கான உணவைத் தேடிக் கொண்டன. மனித இனம் தோன்றிய காலத்திலும், இயற்கை உணவே பிரதானமாக இருந்தது. உணவை விளைவித்து, சமைக்கத் தொடங்கிய காலத்திலும் இயற்கையை மனிதன் மீறவில்லை.

எப்பொழுது, அதிகம் விளைவிக்க வேண்டு மென்ற பேராசை வந்ததோ, அப்பொழுதுதான் மனிதன் செயற்கை முறைகளைக் கையாளத் தொடங்கினான். இதனால், இந்த இயற்கைக்கு எதிராக செயல் படுகின்றான் என்பதை அறியாமல், இத்தகைய இன்னல்களுக்கு ஆளாகின்றான்.

அந்த வகையிலே, மனிதனை விட அறிவில் குறைந்த பறவைகளில் ஒன்றான காக்கை இனம்கூட, தன் இனத்தாரைக் கரைந்து கூப்பிட்டு, ஒன்றாய் உணவருந்தும் பண்பைப் பெற்றிருக்கின்றன. ஆனால், ஆறறிவு படைத்த மனிதன் தன் குடும்பத்தாருடன் கூட ஒன்றாக உட்கார்ந்து உணவு அருந்த முடியாத அவல நிலைக்கு தள்ளப்பட்டுள்ளான்.

மனிதனின் உணவு உற்பத்திக்குத் தேவையான விளை நிலங்களின் விளைச்சலை விரையமாகாமல் தடுக்கக்கூடிய தலையாய வழிமுறை ஒன்றை நம் தலைமுறை விவசாயிகள் நடைமுறையில் கொண்டு இருந்தனர்.

அதாவது, அதிகமில்லை சுமார் முப்பது வருடங்களுக்கு முன்புவரை, கிராமங்களில் அரணாக இட்டேரிகள் இருந்தன.

அதாவது, ‘**இட்டேரி**’ என்பது கொங்கு நாட்டுச் சொல்.



இருபுறமும் அடர்ந்த வேலிகள். அதன் நடுவில் ஒற்றையடிப் பாதை அல்லது மாட்டுவண்டித் தடம் இருக்கும். இதுவே **இட்டேரி** எனப்படும்.

இந்த இட்டேரி என்பது "**ஒரு தனி உலகம்.**"

இதில் கள்ளி வகைகள், முள்ளுச்செடிகளுக்கு இடையே, வேம்பு, மஞ்சள், கடம்பு, நுணா, புரசு போன்ற அனேக மரங்கள் வளர்க்கப்பட்டன.

இத்துடன், நொச்சி, ஆடாதொடை, ஆவாரம் போன்ற செடிவகைகள், பிரண்டை, கோவை போன்ற கொடிவகைகள், மற்றும் பெயர் தெரியாத எண்ணற்ற புற்பூண்டுகள் நிறைந்தவாறு இருக்கும் இந்த இட்டேரி.

இதை "**உயிர்வேலி**" என்று அழைத்தனர் அன்றைய விவசாயிகள்.

இவை உயிர்வேலியாய் விவசாய நிலங்களை காத்து வந்தன. இங்கு எண்ணற்ற உயிர்களும் இந்த செடி, கொடி, மரங்களுடன் வாழ்ந்து வந்தன.

இதில் எண்ணற்ற கறையான் புற்றுகள், எலி வங்குகள் நிறைய காணப்படும். இத்துடன் நிழலும் ஈரமும், இலைக்குப்பைகளும் எப்போதும் காணப் படுவதால் எண்ணற்ற பூச்சியினங்களும் காணப்படும்.

இவைகளை உணவாக உட்கொள்ள வண்டுகள், நண்டுகள், பாம்புகள், பாப்பிராண்டிகள், உடும்புகள், ஓணான்கள், கோழிகள், குருவிகள், அலுங்குகள், ஆமைகள், என எண்ணிக்கையில் அடங்காத ஏராளமான உயிர்களும், இவைகளை உணவாக உட்கொள்ள பாம்புகள், பருந்துகள், நரிகள் போன்றவைகளும் அதிகம் காணப்பட்டன.

மனிதர்களுக்கு கோவப்பழம், கள்ளிப்பழம், சூரிப்பழம், பிரண்டைப் பழம், போன்ற சுவையான கனிவகைகளும், கோவக்காய், களாக்காய், பிரண்டை கொழுந்து, சீகைக்கொழுந்து என்று சமையலுக்கு உதவும் பொருட்களும், மூலிகைகளும் அனேகம் கிடைத்தன.

இந்த வேலியில் வாழ்ந்த எண்ணற்ற குருவிகள், ஓனான்கள், தவளைகள் பயிர்களை சேதப்படுத்தும் பூச்சிகளை அழித்தொழித்தன.

பாம்புகள், ஆந்தைகள், எலிகளின் என இவைகள் ஒன்றை ஒன்று உணவாக உட்கொண்டு உணவுச் சுழற்சியை மேற்கொண்டன. அதாவது, பறவைகளின் எண்ணிக்கையை பாம்புகளும், வல்லூறுகளும் கட்டுப்படுத்தின.

பாம்புகளின் எண்ணிக்கையை மயில்கள் கட்டுப்படுத்தின.

**"மயில்களின் எண்ணிக்கையை நரிகளும், காட்டுப் பூனைகளும் கட்டுப்படுத்தின."**

ஆனால் இன்று .....???

இவைகள் ஒன்றை ஒன்று சார்ந்து வாழுகின்ற உணவுச் சங்கிலி வெட்டப்பட்டுள்ளது எனலாம்.

விவசாய நிலங்கள் வீட்டுமனைகள் ஆனது, ஏரி, குளங்கள் எல்லாமே அடுக்குமாடி கட்டிடங்கள் ஆனது. இதனால், இந்த வேலிகளும் அழிந்தன. வண்டித் தடங்கள் அனைத்துமே தார் சாலைகள் ஆயின. இட்டேரிகள் எல்லாமே இன்று இல்லாமல் போயின.

அதிக பணம் பார்க்கும் ஆசைகளினால் இன்றைய விவசாயிகள் கொஞ்சம் நஞ்சம் மிஞ்சி இருக்கும் விவசாய நிலங்களுக்குத் தேவையான உயிர் வேலியையும் அழித்து, காக்கா, குருவிகள் கூட, கூடு கட்ட முடியாத அளவிற்கு நவீன தொழில் நுட்ப தொலைப்பேசிகளுக்குத் தேவையான தொலைத் தொடர்பு கோபுரங்கள் (Cellphone Towers) அமைக்கப் பட்டன.

இதனால் எண்ணற்ற உயிரினங்கள் வாழ இடமின்றி போனது.

அதில், மிக முக்கியமானது குள்ளநரிகள் எனலாம். இவைகள் மயில்களுக்கு மிகவும் முக்கியமான எதிரிகள் ஆகும். இவைகள் மயில்களின் முட்டைகளையும், குஞ்சுகளையும் தந்திரமாக கவர்ந்து உணவாக்கிக் கொள்ளும். இந்த குள்ள நரிகளை இன்று நாம் எங்கும் காண முடியவில்லை. அவ்வாறே, சிட்டுக் குருவிகளையும் எங்கும் காண முடிவதில்லை.

இந்த குள்ள நரிகளில் ஆகட்டும், சிட்டுக் குருவிகள் ஆகட்டும், அவைகள் காடுகளில் மட்டும் ஓரிரு இணைகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக காணப்படுகின்றன.

விளைவு ??

**‘கொரானோ என்ற கொடிய நுண்கிருமி தோற்றம்’**

**"நாம் விதைத்தது நாமே அறுவடை செய்கிறோம்."**

நாம் பள்ளியில் குழந்தைகளுக்கு பல்லுயிரியம் பற்றி பாடங்களை எடுக்கிறோம்.

ஆனால், பள்ளிக்குச் செல்லாத நம் முன்னோர்கள் எப்படியெல்லாம் பல்லுயிர் வளர்ச்சிக்கு பெரிதும் பயன்படும் காரியங்களை பலருக்கும் செய்தனர்.

அவர்களிடம் சுயநலம் இல்லை. சுயநலத்தைக் கற்றுக் கொடுக்கின்ற கல்வியும் இல்லை.

ஆனால், கற்றறிந்தவர்கள் என்று மார்தட்டிக் கொள்ளும் நமக்கு பல்லுயிரியம் பற்றி என்ன தெரியும்? அந்த அனைத்து உயிரினங்களுக்கு அதாரமான மெய்ப்பொருளைப் பற்றி எப்படி தெரியும்?

ஒன்றுக்கும் உதாவத இன்றைய கல்வி முறையினால், இருப்பவர்களையும் ஏமாற்றிப்பிழைக்கும் பெரும் பேராசைக்காரர்களாகவே இன்றைய இளைய தலைமுறை மாற்றப்பட்டுள்ளது எனலாம்.

உண்மையான அரசியல் எது என்று தெரியாமல், சாதி அரசியல் பேசிக் கொண்டு, குரங்கு வித்தைகள், கேளிக்கைகள், ஆடம்பரங்கள் என பலவற்றிலும் பணத்தை செலவு செய்துக் கொண்டு, அத்துடன் மரபணு மாற்றம் செய்யப்பட்ட உணவுகள், பன்றிப்பால், சாரயம் என எல்லாவற்றையும் உண்டு, இனிமையாகப் பொழுதை இணையதளத்திலே கழித்துக்கொண்டு வாழும் இனி வரும் காலங்கள் காலனின் கையில் கொடுக்கப்பட்டுள்ளது என்பதை மட்டும் மறந்து விடக்கூடாது.

தற்பொழுது, இந்தியர்களின் பண்பாடும், வரலாறும் தெரியாத அளவிற்கு நம்முடைய இளைய தலைமுறையின் வளர்ச்சி உள்ளது!.

மேலும், இதில் தமிழர்கள், வட நாட்டவர்கள் என்ற பிரிவினைகள் இவர்களுக்கு வலுக்கட்டாயமாகக் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. நம் தேசத்தை நாமே இரண்டாகப் பிரிக்கும் சூழ்ச்சியில் சிக்குண்டுள்ளோம் என்பதை எண்ணும் போது, கொள்ளிக்கட்டையால் சொரிந்து கொண்டால், புண்ணாகத்தான் செய்யும் என்ற புரிதல்கூட இல்லாத அளவிற்கு, இன்று நாம் பின் தங்கி உள்ளோம் என்பதை எளிதாக அறிய முடிகின்றது.

எப்பொழுது மனிதன் அனைத்து உயிர்களையும் தன் உயிர்போன்று கருதி, அவைகளுக்குத் துன்பம் செய்யாமல் வாழ முற்படுகின்றானோ, அன்றுதான் அவனுக்கு “**வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்**” என்ற வள்ளல் பெருமானின் வாக்கியத்தின் வலுவான உண்மையை உணர முடியும்.

**ஓம் தத் சத்!**

நன்றி!

**என்றும் அன்புடன்,**

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

# கொரோனாவும்! கொடிய மரணமும்!



**“ஓர் உயிரினத்தின் அழிவு எவ்வளவு ஆபத்தோ, அதே அளவு ஆபத்து ஓர் உயிரினம் அதிக எண்ணிக்கையில் பெருகுவதிலும் இருக்கிறது”.**